

# அகிலத்தின் வழிகாட்டி அண்ணல் முஹம்மது நபி

## ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

**மௌலவி எம். அப்துல் கரீம் அல்ஜியலி**

புத்தன்துறை

இன்றைய செய்திகள்தான் நாளைய வரலாறாக உருவெடுக்கிறது. அந்தச் செய்திகள் உண்மையாக, உள்ளது உள்ளபடி பதிவு செய்யப்பட்டால்தான் நாளை அந்த வரலாறு உண்மையான வரலாறாக அமையும்.

அப்படி பதிவு செய்யப்பட்ட வரலாறு களில் நூறு சதவீதம் ஆதாரங்களுடன் உண்மையாக, கொஞ்சமும் கற்பனை கலக்காமல் பதிவு செய்யப்பட்ட வரலாறு, அண்ணல் பெருமானார் நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வரலாறு.



எந்தவொரு சந்தேகத்திற்கும் இடமின்றி அப்பெருமகனாரின் ஒவ்வொரு அசைவு களும் ஆதாரங்களுடன் பதிவு செய்யப்பட்டு ஆயிரத்து நானூற்றுக்கும் மேற்பட்ட ஆண்டுகளாகப் பேணிப் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

இப்படிப் பாதுகாக்கப்பட்ட வரலாற்றுக்குச் சொந்தக்காரர் நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தவிர வேறு எவருமே இல்லை. உறுதி!

அப்பெருமகனாரின் இனிய பெயர் முஹம்மத் – புகழப்பட்டவர்.

ஆம்! இந்த விண்ணும் மண்ணும் உள்ளளவும் அவர்கள் புகழப்பட்டுக் கொண்டே இருப்பார்கள். இவை அழிந்து போன பின்னரும் அண்ணலவர்களின் இனிய நாமம் துலங்கிக் கொண்டிருக்கும். இடைவிடாமல் ஒவ்வொரு வினாடியும் அவர்களது இனிய நாமம், அல்லாஹ்வின் அருட்திருநாமத்தோடு இணைக்கப்பட்டு இம்மணற்பரப்பின் எண் திசைகளிலும் ஓங்கி முழங்கப்பட்டு விண் முகடுகளில் எதிரொலித்துக் கொண்டிருக்கும். மனிதராய்ப் பிறந்த எவருக்கும் கிட்டாத மகாபாக்கியம் அது.

அல்லாஹ் தனது இனிய நேசரான அவர்களுக்குத் தனி அந்தஸ்த்துகளை உயர்வான தகுதிகளை ஒப்பற்ற புகழை வேறு எவருக்கும் வழங்காத பெரும் பேறுகளை வழங்கிச் சிறப்பித்துள்ளான்.

அருள்மறை அல்குர்ஆன் வசனங்களின் விளக்கவுரையாக அமைந்திருந்தது நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாழ்க்கை. தமது சொற்களால் அல்குர்ஆன் வசனங்களை அவர்கள் விளக்கிச் சொன்னார்கள். வாழ்க்கையில் அதனைக் கடைபிடித்து வழிகாட்டித் தந்தார்கள்.

நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும், நன்மை செய்யு மாறும், உறவினர்களுக்கு கொடுத்து ஆதரிக்குமாறும் கட்டளை இடுகிறான். மேலும் மானக்கேடானவை, வெறுக்கப்பட்டவை, வரம்பு மீறுதல் ஆகியவற்றை விட்டு(உங்களை) விலக்குகிறான். (இதனை) நீங்கள் நினைவில் வைத்துக் கொள்வதற்காக உங்களுக்கு அவன் உபதேசிக்கிறான் – (அல்குர்ஆன் 16:90)

அல்லாஹ்வையும், நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்களையும் நம்பிக்கைக் கொண்டு, அல்குர்ஆனை ஏற்றுச் செயல்பட அழைப்பு விடுக்கிற இஸ்லாம், முந்தைய நபிமார் களையும், அவர்களுக்கு அல்லாஹ்வால் அருளப் பெற்ற இறை வேதங்களையும் நம்பிக்கை கொள்ளவும் கட்டளை இடுகிறது. இதைவிட உயரிய வாழ்க்கைத் தத்துவங்கள் வேறென்ன இருக்கிறது?

எப்படி வாழ வேண்டும் என்பதையும், இப்படித்தான் வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதையும் துல்லியமாக வாழ்ந்து காட்டி மனித சமூகத்திற்கு வழிகாட்டித் தந்த ஒளிவிளக்கு அவர்கள்.

அவர்கள் சொன்னதைச் செய்தார்கள். செய்ததை மட்டுமே சொன்னார்கள். அவர்களின் சொல்லுக்குச் செயலோ, செயலுக்குச் சொல்லோ ஒருபோதும் முரண்பட்டதில்லை. அவர்கள் காட்டித் தந்த வழிமுறைப்படி வாழ்க்கையை அமைத்துக் கொண்டால் இம்மை வாழ்வில் மட்டுமின்றி, மறுமையிலும் சாந்தி கிடைக்கும் நற்பேறுகள் வாய்க்கப் பெறும்.

அந்தக் கலங்கரை விளக்கம் காட்டித் தரும் திசையினில் சரியாகச் சென்றால் வாழ்க்கைப் படகு மூழ் காது. ஒருபோதும் திசை தவறியும் செல்லாது இது உறுதி. அவர்களது வழிகாட்டுதல்கள் நேரான பாதைக் கான வழிகாட்டி. செல்லுமிடத்தை மிகத்துல்லிய மாகச் சொல்லித் தரும் திசைகாட்டி. அப்பெருமகனாரின் வழிகாட்டுதல் கள் அழகிய முன்மாதிரிகள் பின் பற்றப்படு மானால் அகில உலகிலும் சமாதானம் நிலைக்கும், சச்சரவுகள் அகலும். சமத்துவமும், சகோதரத் துவமும் தவழும்.

*நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும், நன்மை செய்யுமாறும், உறவினர்களுக்கு கொடுத்து ஆதரிக்குமாறும் கட்டளை இடுகிறான். மேலும் மானக்கேடானவை, வெறுக்கப்பட்டவை, வரம்பு மீறுதல் ஆகியவற்றை விட்டு(உங்களை) விலக்குகிறான். (இதனை) நீங்கள் நினைவில் வைத்துக் கொள்வதற்காக உங்களுக்கு அவன் உபதேசிக்கிறான்.*

அன்றொரு நாள் அடிவானத்தில் விடி வெள்ளி ஒன்று முளைத்தது. திசை தெரியாமல் பயணம் செய்துக் கொண்டிருந்தவர்களுக்கு அந்த விடி வெள்ளி செல்ல வேண்டிய பாதையை தெளிவாகச் சொல்லிக் கொடுத்தது. தகித்துக் கொதித்துக் கொண்டிருந்த பாலை நிலத்தில் பசுஞ்சோலையொன்று முளைத்து வந்தது. நிழல் தேடி அலைந்துக் கொண்டிருந்த கூட்டத்திற்கு அந்தச் சோலை இதமான நிழலைத் தந்தது. சுகந்தத் தென்றல் அவர்களை சுகமாகத் தாலாட்டியது.

ஆம்! அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உதயம் மகத்தான பல மாற்றங்களுக்கு வழி வகுத்தது. மதுவிலும், மங்கை போகத்திலும் அமிழ்ந்து போய்க் கிடந்த ஒரு மொத்த நாட்டின் விமோசனத்திற்கான சங்கநாதம் முழங்கியது. மதிக்கப்படாமல் மிதிக்கப்பட்டு அடிமைகளாய் ஒடுக்கப்பட்டுக் கிடந்த பெண்ணினத்தின் வாழ்வில் வசந்தங்கள் தாலாட்டுப் பாட்டு பாட வைத்தது.

உயிரோடு கதறக் கதற புதைக்கப்பட்ட பெண் குழந்தைச் செல்வங்களுக்கு வாழ்வுரிமை கிடைத்தது. கவனிப்பாரற்றுத் திரிந்த அனாதை மக்களின் வாழ்வில் விடியல் ஏற்பட்டது.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஆமிர் இப்னு ஸஃஸஆ என்ற கோத்திரத்தாருக்கு இஸ்லாமை ஏற்றுக்கொள்ள அழைப்பு விடுத்தபோது, அவர்களில் ஒருவரான புஹைரா, நாங்கள் உங்கள் அழைப்பை ஏற்று தங்களை ஒப்புக் கொண்டு, தங்களுடைய மார்க்கத்திற்கு வருகிறோம். பிற்காலத்தில் இறைவன் வெற்றியைத் தந்து ஆட்சியும், அதிகாரங்களும் தங்களுக்குக் கிடைத்தால் அதில் எங்களுக்கும் பங்கு தருவீர்களா என்று கேட்டார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவருக்குச் சொன்னார்கள்: ஆட்சியும், அதிகாரங்களும் அல்லாஹ் ஒருவனுக்கே

உரியன. அவன் நாடியவர்களுக்கே அதனை வழங்குவான். ஆட்சியிலும், அதிகாரத்திலும் பங்கு தருவதாக ஆசை காட்டி இஸ்லாமை ஏற்றுக் கொள்ள நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் யாருக்கும் அழைப்பு விடுக்கவில்லை.

மாறாக இஸ்லாமிய சாம்ராஜ்யத்தை உருவாக்கிய அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனா என்ற நகரில் கோட்டை கொத்தளங்கள் உருவாக்கவில்லை. வெறும் 1050 சதுர மீட்டர் பரப்பளவு கொண்ட சிறு மண் கூரைக்குள் அமர்ந்து அன்பைக் குழைத்து, இதயத்தை இதயத்தோடு இணைத்து, சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் ஊட்டி அப்பெருமகனார் அரசோச் சினார்கள்.

ஒழுக்கக் கேட்டிலும், அடாவடித்தனங்களிலும் பல தெய்வ வணக்கத்திலும் மூழ்கிப் போய் உலகில் கவனிப்பாரற்று கிடந்த ஒரு நாடோடிச் சமுதாயத்தை வெறும் இருபத்துமூன்று ஆண்டு காலத்தில் முற்றாக மாற்றி எடுத்த மகாபுருஷர் அவர்கள்.

இப்படிப்பட்ட அற்புதம் உலகில் ஒரேயொரு முறைதான் நடந்தது. அதுவும் ஒரேயொருவரால் தான் நடந்தது. அந்த ஒருவர் அண்ணல் முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தான்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் கொண்டு வரப்பட்ட அந்த அதிசய மாற்றங்களுக்கு முடிவே இல்லை. அது ஒரு பேரலை. ஓய்வில்லாத பேரலை. இன்றும் அந்த அலை ஆர்ப்பரித்து வீசிக் கொண் டிருக்கிறது.

ஆம்! இஸ்லாம் என்ற அந்த

*ஆட்சியிலும், அதிகாரத்திலும் பங்கு தருவதாக ஆசை காட்டி இஸ்லாமை ஏற்றுக் கொள்ள நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் யாருக்கும் அழைப்பு விடுக்கவில்லை.*

அலையை யுக முடிவுவரை எந்த சக்தியாலும் தடுத்து நிறுத்தவே முடியாது.

ஒரு புலர் காலை வேளை. லெபனான் நாட்டின் தலைநகர் பெய்ரூத்தின் முஸ்லிம்கள் நிறைந்து வாழும் தெருவொன்றில் வயோதிகரான யூதர் ஒருவர் முஸ்லிம் இளைஞர் ஒருவரைத் தாறுமாறாக அடிக்கிறார். திடகாத்திரமான அவ்விளைஞரால் வயோதிகரைத் திருப்பித் தாக்க முடியுமென்றிருந்தும் யூதப் பெரியவரின் அடிகளை அவர் தாங்கிக் கொள்கிறார்.

மர்மடியூக் பிக்தால் என்ற கிறித்தவர் இக்காட்சியை, அவர் தங்கி இருந்த விடுதியின் மேல் தளத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தார். முஸ்லிம்கள் பெருவாரியாக வாழுகின்ற தெருவொன்றில் யூதர் ஒருவர், முஸ்லிம் வாலிபரொருவரை அடிக்கிறார். திடகாத்திரமாக இருந்தபோதும் அவ்வாலிபர் அடியைத் தடுக்காமல் தாங்கிக் கொண்டிருக்கிறாரே! அவரால் நம்ப முடியவில்லை. பின்னர் அந்த வாலிபரிடமே அதற்கான காரணத்தைக் கேட்டார் பிக்தால்.

முஸ்லிம் இளைஞர் சொன்னார்: அப்பெரியவரிடம் நான் கடன் வாங்கி இருக்கிறேன். குறிப்பிட்ட தவணையில் கடனைத் திருப்பிச் செலுத்த என்னால் முடியவில்லை. அவர் ஆத்திரப்படுகிற அளவுக்குப் பன்முறை தவணையை நீட்டினேன்.

பிக்தால் கேட்டார்: நீ கடன் பெற்றிருக்கலாம். என்றாலும் திடகாத்திரமான நீ ஏன் அவரைத் திருப்பித் தாக்கவில்லை? அவரது அடியைத் தடுக்கக் கூட முயலவில்லை?

நான் அப்பெரியவரைத் தாக்குவது முறையல்ல! பெண்கள் மீதும், வயோதிகர்கள் மீதும் கை நீட்டாதீர்கள் என்று எங்களுடைய திருத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கிறார்கள் என்றார் அவ்விளைஞர்.

இளைஞரின் பதில் பிக்தாலின் இதயத்தில் புதிய சிந்தனை களுக்கு வித்திட்டது. அவரது அறிவுக் கண்விழித்துக் கொண்டது.

பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னர் எங்கோ தூரத் தொலைவில் ஒரு பாலைவன நாட்டில் அவதரித்த ஒருவரின் வழிகாட்டுதல் இதோ இன்றும் இந்த இளைஞரை வழிநடத்திச் செல்கிறது, அவர் சிந்தனை வயப்பட்டார். பிக்தால் சாதாரணமான குடும்பத்தில் பிறந்தவர் அல்லர். லண்டனைச் சார்ந்த கிறித்தவப் பாதிரியார் ஒருவரின் மகன். இளவயதிலேயே ஐரோப்பிய நாடுகள் பலவற்றுக்குச் சுற்றுப் பயணம் மேற்கொண்டு பிரெஞ்ச், இத்தாலி, ஜெர்மானிய மொழிகளைக் கற்றவர். எகிப்து, சிரியா, பலஸ்தீன், லெபனான், துருக்கி ஆகிய நாடுகளுக்குச் சென்று அரபி மற்றும் துருக்கி மொழிகளையும் கற்றுத் தேர்ந்தவர். பிக்தால் இஸ்லாமையும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கையையும் ஆராய்ந்தார். விளைவு.....? முஹம்மத் பிக்தால் என்ற புது மனிதரானார். ஆங்கிலத்தில் திருமறை அல்குர்ஆனுக்கு விரிவுரை எழுதிப் புகழ் பெற்றார்.

இருண்ட காலம் என்று வர்ணிக்கப்பட்ட ஆறாம் நூற்றாண்டைச் சார்ந்த அரபுலக மக்கள் மிகக் குறுகிய காலத்தில் எப்படி மாறிப் போனார்கள். நாடோடிகளாய் சீண்டப்படாமல் கிடந்த அவர்களை குறுகிய காலகட்டத்திற்குள் உலகு மிக்க திகைப்போடு திரும்பிப் பார்த்தது. அவர்களது பண்பாட்டைப் பார்த்து அதிசயப்பட்டது. அவர்களது ஆற்றலைக் கண்டு அஞ்சியது. அவர்களுக்குள் ஒளிந்து கிடந்த ஆற்றலை, பேரறிவை, கலாச்சார மேன்மையை, நாகரீகத்தை, நற்குணங்களை, விழுமிய ஒழுக்கத்தை அண்ணல் பெருமானார் நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெளிக் கொணர்ந்தபோது உலகு அவர்களது காலடிக்குள் சரணடைந்தது.

இப்படியொரு கலாச்சார பண்பாட்டுப் புரட்சியை சாதாரண ஒருவரால் செய்திட முடியுமா? தனித்துவமும், பேராற்றலும், இறையருளும் வாய்க்கப் பெற்ற ஒரு மகாபுருஷரால் மட்டுமே ஒரு சமுதாயத்தின் உள்ளத்திலும், உணர்விலும், சொல்லிலும்,

செயலிலும் மகத்தான மாற்றங்களை ஏற்படுத்த முடியும். சீரழிந்து போன வாழ்க்கையைத் திருத்திச் செப்பனிட முடியும். தவறான பாதையிலிருந்து கை பிடித்துக் கரையேற்றி நேரான பாதைக்கு கொண்டு வர முடியும்.

அப்படிப்பட்ட அந்தப் பெருமகனாருக்கு விண்ணிலும், மண்ணிலும் வேறு எவருக்கும் வழங்கப்படாத பல தனித்துவங்களை அல்லாஹ் வழங்கியுள்ளான். இனி வேறு எவருக்கும் அவை வழங்கப்படப் போவதுமில்லை.

எனவே அல்லாஹ்வால் கண்ணியப்படுத்திச் சிறப்பிக்கப்பட்ட பெருமானார் நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பின்பற்றுவதும், கண்ணியப்படுத்துவதும், அவர்களுக்கு உரிய உயரிய மரியாதையை வழங்குவதும், மதிப்பைத் தருவதும் ஒவ்வொரு முஸ்லிமுடையவும் கடமைகளுள் ஒன்றாக அமைகிறது.

முஃமின்களுக்கு திருநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம் உயிரை விடவும் மிக்க மேலானவர்கள் என்று அருள்மறை அல்குர்ஆன் சொல்கிறது. ஒரு மனிதன் எல்லா வற்றையும் விட தன் உயிரையே மிக்க மேலாக மதிப்பான். அந்த உயிரைவிட அண்ணல் நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மதிக்க வேண்டும். உள்ளன்போடு நேசிக்க வேண்டும். மரியாதை தர வேண்டும் எனும்போது அப்படிப்பட்ட ஒருவர் எப்படிச் சாதாரணமானவராக இருக்க முடியும்?

நபியுல்லாஹ் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை நம்ரூத் எனும் திமிர் பிடித்த மன்னன் வெறுமொரு சாதாரண மனிதராகக் கண்டான். அவர்களை உயிரோடு எரித்துவிடக் கருதி நெருப்புக் குழியில் வீசி எறிந்தான்.

நபியுல்லாஹ் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை சாதாரண ஒரு மனிதராக அரக்க மனம் படைத்த ஃபிர்அவ்ன் கண்டான். அவர்களுக்கு சகிக்கவொணாத் தொல்லைகள் தந்தான்.

கொடூர குணம் கொண்ட அபூஜஹ்ல், உத்பா, ஷைபா, இன்னபிற குறைஷிக் காஃபிர் தலைவர்கள் அண்ணல் நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சாதாரண மனிதராகவே கண்டு, துன்பங்கள் பல இழைத்தனர். கொடுமைகள் புரிந்தனர்.

மனித குலத்தை ஏக இறைப் பாதையில் செலுத்தும் திவ்விய திருப்பணியை செவ்வனே செய்திட பல்வேறு காலகட்டங்களில் வருகை தந்த கண்ணியமிக்க இறைத்தூதர்களை இறை மறுப்பாளர் களும், பல தெய்வ வணக்கக்காரர்களும் தம்மைப் போலவே வாழ்ந்து, மடிந்து போகிற சாதாரணமானவர்கள் என்று கருதி ஏளனம் செய்தனர். ஏகடியம் பேசினர். கொலை செய்திடத் திட்டம் தீட்டினர்.

நபிமார்களைச் சாதாரண மனிதர்களாகக் குறைத்து மதிப்பிட்டு, தொல்லைகளும், துன்பங்களும் தந்த குறைமதியாளர்களின் முடிவுகள் எப்படியெல்லாம் அமைந்தன. எவ்வாறெல்லாம் தண்டிக்கப்பட்டார்கள் என்பதை வரலாறுகள் காலம் காலமாய் நமக்குச் சொல்லிக் கொண்டிருக்கின்றன. அருள்மறை அல்குர்ஆன் அவ்வரலாறுகளை தெளிவாய்ப் படம் பிடித்துக் காட்டுகிறது. அவ்வரலாறுகள் படிப்பினைகளாய் நமக்கு முன்னே விரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. நபிமார்களுக்குத் துன்பங்கள் தந்த மக்கள் சுவடே தெரியாமல் அழிக்கப்பட்ட வரலாறுகளிலிருந்து பாடம் பெற அல்குர்ஆன் அழைப்பு விடுத்துக் கொண்டிருக்கிறது.

அண்ணல் நபியுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உயர்வுகளை, அந்தஸ்த்துகளை, ஆற்றல் களை இம்மை மறுமைப் பேறுகளை அவற்றை வழங்கிய அல்லாஹ் ஒருவன் மட்டுமே முற்ற முழுக்க அறிந்தவன். எனவே யாராலும் அவர்களைக் குறித்து முழுமையாக எழுதித் தீர்த்து விட முடியாது. அவர்களின் சிறப்புகளைப் பட்டியலிட்டுத் தீர்த்து விடவும் இயலாது.